தன் பணி நீத்தல், நேயத் தழுந்தல் என்று மூன்றாக்கி, அவற்றை முறையே ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, ஆன்ம லாபம் எனப் பெயர் தந்து,

"தேசுற மருவும் ஆன்ம தெரிசனம் ஆன்ம சுத்தி
ஆசிலா ஆன்ம லாபம் ஆக மூன்றாகும் மூன்றும்
பாசமது அகல ஞானம் பற்றல் தான் பணியை நீத்தல்
ஏசில் நேயத்து அழுந்தல் எனும் இவற்று அடங்கும் அன்றே"

என்று வகுத்தும் விளக்கியும் கூறினர்.

நாம் செய்யும் முயற்சியில் நமது கருவி கரணங் களோடு கலந்து, நாம் அறிய வேண்டியவற்றைத் தானும் அறிந்தும், அதுபற்றி நாம் செய்ய வேண்டியவற்றிற்குச் செய்முறை அறிவித்தும், திருவருள் உதவுவதை நினையின், உதவி புரியும் அவன்பால், உதவி பெறும் நமக்கு அயரா அன்புண்டாகிறது. அந்த அன்பு, நம்மை, முடிவில், உடலின் நீங்கும் காலத்துச் சிவானந்த ஞான வடிவம் நல்கிச் சிவபரம் பொருளின் திருவருள் இன்பம் பெறு விக்கிறது.

இதனை மெய்கண்டார்,

"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே"

என்றார்.

இச் செயல் முறைகள், சுமார் 700 ஆண்டுகட்கு முன் வாழ்ந்த மக்களினத்துக்கு இனிது அறிந்து கொள்ளும் வகையில் உரைக்கப்பட்டன. இடைக் காலத்தில் நாம் நம் நாட்டின் சூழ்நிலையையும் மக்களினத்தின் நினைவியல்புகளை யும் பொருளும் தொழிலும் பிறவுமாகிய வாழ்வியல்களை யும் அறியும் அறிவு சுருங்கிப் "பிறர்க்கே உழைத்து ஏழை யானேன்" எனத் திருமங்கையாழ்வார் சொல்வது போலப் பிறர் பொருட்டு அடிமையுற்றோம். அதனால், இன்று நமக்கு அப்பெருமக்கள் கூறியன அறிதற்கு அருமையாகத் தோன்றுகின்றன. எளியவாய் இருப்பின், நாம் அனைவரும் சிறிய பெரிய சிவஞானச் செல்வர்களாக அன்றே திகழ்வோம்!

இந்த நிலையில் கல்வி, சமுதாயம், தொழில், வாணிகம், அரசியல் முதலிய துறைகள் அருள்நெறி நோக்காது பிறழ்ந்து போகின்றன. எல்லாவற்றிற்கும் அடிப்படையாக உள்ளமனமும் சொல்லும் செயலும் இருள் நெறியிலே இயங்குகின்றன. மன நினைவில் காரண காரிய ஆராய்ச்சி நோக்கமில்லை. மெய்யுணர்தல் என்ற தலைப்பில் திருவள்ளுவர் சொன்ன அறவுரை, செயலுக்கு வரவில்லை. எதனையும், ஏன்? எப்படி? என ஆராயும் மனப்பான்மை பெரும்பான்மையும் காணப்படவே இல்லை. அதனால் வாயிலிருந்து வெளிவரும் சொல், உள்ளே மனத்துக்கும் வெளியே செயலுக்கும் ஒவ்வாமல் உளது. சொல் வேறு, செயல் வேறு படுதலால் தொழிலும் வாணிகமும் உலக மக்கள் அரங்கில் நம்பிக்கையிழந்து சோர்வுபடுகின்றன. தான் வாழ ஏனோர் தனக்குக் கீழாக எனும் ஊன அறிவு உயர்ந்து நிற்கின்றது.

மக்கள் மனம் வாழ்க்கைக்கு இன்றியமையாத உணர்வுகளால் நிரம்பாது குறைபடுவதால், பள்ளத்தை நோக்கியோடும் நீர் போலத் தன்னலம் ஒன்றே கருதும் தீயுணர்வுகள் போந்து மனத்தில் நிரம்பிவிட்டன; துன்பமும் இருளும் சூழ்ந்துகொண்டன. அருள்நெறி நல்கும் இன்பமும் ஒளியும் மறைந்தன. அச்சமும் அடக்கப் பண்பும் தோன்றி உலக அரசியற் சூழலில் அலைக்கின்ற காட்சியை நாம் நாளும் காண்கின்றோம். நாமும் சமய மாநாடு கூட்டியும் புராணப் பிரசங்கம் செய்தும் திருவிழாக்கள் எடுத்தும் சமயவுணர்வும் ஒழுக்கமும் ஓங்கச் செய்தோம்; நமது சமுதாயம் இம்மியளவும் அசையவில்லை.

மக்கள் வாழ்க்கையை நோக்காது அதைப் புறக்கணித்து இயலும் எவ்வகைச் சமயமும் சமயமாகாது. வாழ்வில் அறமும் பொருளும் இன்பமும் நிறைந்து அமைவதை வற்புறுத்துவது தான் உண்மைச் சமயம். வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து சிவப் பேரின்பம் பெறச் செய்வதே நம் சைவ சமயத்தின் குறிக்கோள். அதுபற்றியே, சைவ சமயத்துக்கென வரையறுத்த நூல்களைத் தொகுத்துக் கூறிய பண்டை நாளைப் பெரியோர்,

"வள்ளுவர்மெய் யன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே
தெள்ளு பரிமேலழகன் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓர்ஆறும்
தண்டமிழின் மேலாம் தரம்" என்றனர்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" என்ற திருக்குறளும், அதன் கடவுள் வாழ்த்து, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல், ஊழ் என்ற அதிகாரங்களும் பிறவும் சைவத்தின் தனிப் பெருங் கொள்கைகளாதலால், சைவர்கள் திருக்குறளை முதற்கண் நன்கு படித்துப் பயில வேண்டும் என்பதற்காக வள்ளுவர் எனத் தலைமை நூலாகத் திருக்குறளைச் சைவர்கள் மேற்கொண்டனர்.

மண்ணுலகு முதலிய பலவகை உலகுகளையும் இறைவன் படைத்தளிப்பது, "நாம் மண்ணகத்தே வந்து" வாழ்தற் பொருட்டே என்று ஞானசம்பந்தர் முதல் மாணிக்க வாசகரை உள்ளிட்ட பலரும் அவ்வப்போது உரைத்துள்ளனர். உடம்பை நன்கு பேணினாலன்றி மக்கள் ஞான வாழ்வு பெறார் என்பதற்காகத் திருமூலர்,

"உடம்பார் அழியின் உயிரார் அழிவர் ;
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்"

என்று தெளிவாகக் காட்டியுள்ளார்.

மக்கள் வாழ்வு தனித்தனியாகவும் சமுதாயமாகவும் இயலுவது. இவ்வாழ்க்கைக்கு வேண்டுவன உதவும் வகையில் கல்வியும், தொழிலும் வாணிகமும் பணி புரிகின்றன ; இவற்றிற்கு ஏற்ற வாய்ப்பும் பாதுகாப்பும் அரசு நல்குகிறது. மனைவாழ்வு - நோய்க்கிடந்தராத அகம் புறம் தூய்மை பற்றிய அறிவும், மக்களை நன்முறையில் வளர்த்து நல்லொழுக்க முடையராக்கும் செயல்பற்றிய அறிவும், ஒவ்வொருவரும் மேற்கொண்டிருக்கும் தொழில் பற்றிய அறிவும், சமுதாயத்துக்கும் அரசுக்கும் தனக்கும் உள்ள தொடர்பு பற்றிய அறிவும், திருவருள் முதல்வனாகிய சிவ நெறி அறிவும் கருத்தும் அமைய வேண்டும் என்று வில்லியம் குளோவர் (William Glover) என்பவர் உரைக்கின்றார். இந்த அறிவு மக்கள் மனத்தில் சிந்தனையைத் தூண்டி எல்லாவற்றிற்கும் உள்ளீடாய்த் திகழும் திருவருள் ஞானத்

தைப் பெறுவிக்கும் என இக்காலத்துச் சமயச் சான்றோர் கூறுகின்றனர். இங்கே குறித்த அறிவுகளும் கருத்துக் களும் உலக வாழ்வை வாழ்வாங்கு வாழத் துணைசெய்து திருவருள் ஞானத்தை விரிவாகப் பெறுதற்கு உதவு கின்றன.

அருளாராய்ச்சியால், மாயா காரியமாகிய உலகியற் பொருள் நிகழ்ச்சிகளின் உண்மை புலனாகிறது; செய்யப் படும் நல்வினை தீவினைகள் முறையே நல்கும் இன்பங் களையும் துன்பங்களையும் சமமாக நோக்கும் மனப்பான்மை எய்துகிறது. அதனால், உண்மையறிவான சிவ ஞானத் தால் உலகியல் நாட்டம் தூர்ந்து விடுகிறது; உயிர் சிவத் துள் ஒடுங்குகிறது. எஞ்சி நிற்கும் வினை பற்றுக்கோடின் றிக் கெட்டொழிகிறது.

வாழ்வாங்கு வாழ்ந்து அருள்நிலையை உணரும் உயிர், அதனை விடாது பற்றிப் பயிலுதற் பொருட்டு நாளும் திருவருட் சிந்தனை இன்றியமையாது வேண்டப்படுகின்றது. அருட் சிந்தனைக்குத் திருவைந்தெழுத்தும், அதனைப் பற்றி விடாமைக்குச் சிவ வழிபாடும் துணையாகும். திருவைந் தெழுத்தில் ம என்ற எழுத்து உலகியல் வாழ்வையும், ந அதனை வாழ்வாங்கு வாழப் பண்ணும் அருளையும், ய வாழும் உயிரையும், வ உலக வாழ்வை விடுத்துச் சிவானந்தத்தை நுகர்விக்கும் அருட்சக்தியையும், சி இறவாப் பேரின்பம் நல்கும் சிவத்தையும் குறிப்பன.

நமது உள்ளம், உலகியல் வாழ்வுக்குரிய மனைவாழ்வு, சமுதாய வாழ்வுகட்கு வேண்டிய அறிவு செயல் வகை களில் ஈடுபடுங்கால், அவற்றிற்குரிய கருத்துக்களை வழங்கி, உலகியற் பயன்களை நுகரப்பண்ணும் திருவருள், சிவத்தை யும் அதன் பேரருளையும் நினையாவாறு மறைக்கும். மறைக் காவிடில், உலகியல் அனுபவம் நிகழாது; உயிர் தன்னைச் சூழ்ந்திருக்கும் இருள் மறைப்பினின்றும் நீங்காது. அதற் காகவே நாம் ஒன்றில் ஈடுபடும்போது, மற்றவை தோன் றுதவாறு மறைக்கப்படுகின்றன. திருவருள் நினைவால் அதற்கு முதலாகிய சிவத்தை நினைக்கும்போது, உலகியல் உணர்வுகளை மறைத்து, சிவ நினைவால் பிறக்கும் சிவஞான வாழ்வை நுகர்விக்கின்றது. இவ்வாறு உலகியற் பொரு ளின்பாலும் சிவத்தின்பாலும் நம் அறிவும் மனமும் ஈடு

பட்டு இருள் நீக்கம் பெறற்கு இருவழியும் மறைக்குத் துணைபுரியும் திருவருளை ந என்ற எழுத்தால் பெரியோர் காட்டியிருக்கின்றனர்.

உலகில் நாம் வாழ்வாங்கு வாழ்தல் வேண்டியும், அதனை விடுத்து இன்பமே நிலவும் பெருவாழ்வு பெறல் வேண்டியும், தனது திருவருட் சக்தியைச் செலுத்தி, வேண்டுவனவற்றை அறிவித்தும் வேண்டாதவற்றை மறைத்தும் அத்திருவருளே தனக்குத் திருமேனியாகக் கொண்டு, வேறாய் நில்லாது, நம்மோடு உடனாயும் ஒன்றாயும் நின்றருளும் சிவ பரம்பொருளை, நாம் மறத்தல், நன்றி கொன்ற தீவினையாக முடியும்; நன்றி மறத்தல் உலக வாழ்வில் பெருந்துன்பத்தைச் செய்வதுபோல, சிவன்பால் பெறலாகும் பேரின்ப வாழ்விலும் குற்றமாதல் பற்றியே சிவ வழிபாடு சிறப்பாக வேண்டப் படுகின்றது.

சிவ பரம்பொருள் உயிர்கட்குச் செய்திருக்கும் அருட் செயல்களை நினைதலும், வழிபாடாகும்; அதுபற்றியே திருமுறை ஆசிரியர்களும், அவர்கட்குப் பின்வந்த பெரு மக்களும், சிவனுடைய அருட் செயல்களை எழுத்துத் தோறும் இன்பம் பெருக, இனிய இசை கலந்த பாட்டுக் களில் தொகுத்துப் பாடியுள்ளனர். அவற்றைப் பாடிப் பயிலுவதால் நமது உள்ளம் அவனுடைய பேரருட் பெரு மையில் தோய்ந்து பேரின்பமும், உலகியல் நுகர்ச்சிகளை மறந்து தூய்மையும் எய்துகிறது.

இன்றைய மக்களினம் பொருட் செல்வம் பெறுவதே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு, அதனைப் பெருகப் பெறுவதற்குரிய விஞ்ஞானம், தொழில், வாணிகம், அரசியல் என்ற துறையிலேயே பெரு மயக்கம் கொண்டு இயலுகின்றது. உலக வாழ்க்கைக்குப் பின் உயிர்கட்கு வேறு வாழ்க்கையில்லை என்று கூறும் சமயவுரைகள் செல்வாக்குப் பெற்றதே இதற்குக் காரணமாகும். மேலும் அச் சமயங்கள் கடவுட் கொள்கையும் வழிபாட்டு மரபும் உடையவாயினும், மக்களை அறிவாராய்ச்சி வகையால் அறிந்துணரும் வழிவகைகளைக் காட்டாமல், கண்மூடி நம்பிக்கையையே வற்புறுத்தின; அதனால் வாழப் பிறந்த மக்களுக்கு மண்ணில் வாழ உரிமையுண்டு என்பதை மறந்து, ஒருவரையொருவர் தாழ்த்தியும் வேறுபடுத்தும்

அடிமைப்படுத்தும் அவலத்த செய்தியை வரலாறு காட்டு கிறது. இன்றோ மக்களினம், நலம் செய்யக் கற்றுணர்ந்த பொறியியல் விஞ்ஞானத்தால், பேரழிவு விளைக்கும் கருவி களைச் செய்து பெருங்கேட்டை எதிரே நிறுத்திக்கொண்டு வருந்துகிறது. இவ்வுலக வாழ்வுக்குப் பின்னும் வாழ்வு உண்டு. இன்று செய்வன நல்லனவாயின் மறுமையில் இன்பமுண்டு. தீயனவாயின் துன்பமே எய்தும் என்ற எண்ணம் நெஞ்சில் ஊன்றி விடுமாயின் தீமை குறையும்; நன்மை பெருகும்.

தீமை செய்தற்கு அச்சமும், நன்மை செய்தற்கு விருப் பமும் மக்கள் உள்ளத்தில் வளமுற அமைவதற்குச் சமய வுணர்வை மக்களிடையே பரப்புவது தவிர வேறு வழி யில்லை. பொருட் பெருக்கத்துக்கான பொறியியல் தொழி லியல் விஞ்ஞான அறிவைப் பரப்புவதற்காகப் பொது மக்களும் அரசும் பெரிதும் முனைந்திருப்பதைக் காண்கின் றோம். அதுபற்றி, அவர்கள் திட்டங்கள் வகுப்பதையும் அவற்றை முறையே செயற்படுத்துவதையும் அறிகின்றோம். அவை சிறந்த பயனை அளித்து வருவதையும் நாம் கண் கூடாகப் பார்க்கின்றோம். அவ்வாறு நாமும் ஏன் திட்ட மிட்டு நமது சமயப்பணிகளைச் செய்யக்கூடாது?

இன்றைய மாணவர்களே எதிர்காலத்தில் இந்நாட்டு நன்மக்களாவர். அவர்கட்கு வழங்கப்படும் கல்வி உலகிற்கு வேண்டுவனவற்றையே முழுதும் தன்கண் கொண்டுளது. அரசும் அதனையே பெரிதும் ஆதரிக்கிறது. அதன் வாயி லாக வளரும் மாணவர்கள் நாளைக்கு உலகிற்கே பெருங் கேடு செய்யும் பெருங்கருவிகளைப் படைத்து நாசகாரிக ளாகப் பிறங்குவரோ என்ற அச்சம் இப்பொழுது தோன்றியிருக்கிறது. அமெரிக்க நாட்டு நியூயார்க்கு நகரத்து எசிவா (Yeshiva) பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் சாமுவேல் பெல்கின் (Dr. Samuel Belkin) என்பார், தற்காலக் கல்வி நிலையையும், அது உண்மைச் சமுதாய அமைப்புக்கு உதவாதொழிந்தமையையும் மக்கள் பால் அமைய வேண்டிய ஆன்மஞான ஒழுக்கங்களை எண் ணாது பகை வளர்க்கும் பண்பில் செயலாய் அக்கல்வி மாறி யதையும் எடுத்துக் காட்டி, உண்மை காணும் அறிவும், உண்மை ஞான அருளாராய்ச்சியும், மிகைபடப் பெறச்

செய்வதுதான் இன்று கல்வியின் முடிந்த முடிபாக வேண்டும் என்ற கருத்துப்பட, "If the present day educators are openly alarmed at the fact that Europe with its ancient seats of learning failed to stem the tyranny and brutality on the continent, it is primarily because the modern age has overestimated the power of secular and material knowledge to influence the conduct of human beings. Our knowledge of the Natural sciences, the social sciences and humanities has not failed us, we have failed it by expecting these branches of learning to serve a purpose which is not within their domain-the creation of an ideal society.

"The complete divorcement between scientific research and spiritual and moral ideas has brought disastrous consequences. A science which remains indifferent to the importance of morality in the life of society becomes an opponent of morality.

"The end of education should be the cultivation of intellectual and spiritual values bringing to a maximum devolpmennt the moral potentialities of man"[7] என்று கூறுகிறார்.

என்றாலும் பொருள் வேட்கை அறிவை மறைத்து விடுகிறது. கல்வித் துறையில் நாற்பது ஆண்டு அனுபவத்தைக் கொண்டு இதனைக் கண்டுரைக்கிறேன். கெய்சர்லிங் (Keyserling) என்ற மேனாட்டறிஞர், கல்வியாளர் உலகாயதச் சூழ்நிலையைக் கடந்து சென்று விட்டார்கள். இப்பொழுது பொதுமக்கள் அதன்கண் காலை வைத்துள்ளார்கள் என்பாராய், "If men of education have already passed through the materialistic stage, the masses are only just entering it"[8] என்று கூறுகின்றார்.

---

7. Span p. 38 Sept. 1961
8. The World in the Making—p. 265

எதிர்கால மக்களுக்கு இத்தகைய சூழ்நிலை எய்தாமற் காப்பதற்குக் கல்வி நிலையங்களில் திருவருள் உணர்வு ஒழுக்கக் கல்விக்கு இடமில்லை. பொது மேடைகளோ, செய்தித் தாள்களோ இடம் கொடுப்பதில்லை; கோயில் களிலும் போதிய வாய்ப்பில்லை. ஆனால், எங்கள் கல்லூரி நிறுவிய கலைத்தந்தை திரு. கருமுத்து, தியாகராசச் செட்டியார் ஒருவர் தான், திருவருள் உணர்வும் ஒழுக்கமும் நல்கு தற்கு மிக்க துணிவுடன் ஏற்பாடு செய்துள்ளார். வேறு யாரும் எவ்விடத்தும் சைவச் செந்நெறியாகிய திருவருள் உணர்வு நெறியைக் கற்பிக்க எண்ணினரில்லை. பரந்த பெரு நாட்டில், பல கோடி மக்களிடையே பத்துப் பதினைந்து பேர்க்குத் தரப்படும் இக்கல்வி கடலிற் கரைத்த காயம் போல் ஆகிறது.

அரசு வகுக்கும் ஐந்தாண்டுத் திட்டம் போல் அறநிலை யங்களும் செல்வக் கோயில்களும் ஐந்தாண்டுத் திட்டங் கள் வகுத்துத் திருவருள் உணர்வுப் பணி புரியத் தலைப்பட வேண்டும். ஆண்டுதோறும் கோயில்களிலும் அறநிலை யங்களிலும் விழாக்களும் குரு பூசைகளும் நடைபெறுவ தில் தவறுவதில்லை. விழா நடக்கும் நாளில் சொற்பொழிவு களும் நடைபெறுகின்றன. ஆயினும் அவை வெறும் பொழுது போக்காக உள்ளனவே யன்றி முறையாகத் திருவருள் நெறியை உணர்த்துவனவாக இல்லை. இப் பொழுது இந்து அறநிலையத்துறைத் துணை ஆணையாளராக இருக்கும் திரு. விவேகானந்தம் பிள்ளையவர்கள் திருச்செந் தூரில் கோயில் நிர்வாக அதிகாரியாக இருந்தபோது, கந்தர் சட்டி விழாவில் ஆறு நாளும் திருமுருகாற்றுப் படை, சிவஞான போதம் என்ற நூற்பொருளை வகுப்புப் போல அமைத்து நடத்தினர். இருநூற்றுவர்க்குக் குறை யாமல், கற்ற அறிஞர்கள் வந்திருந்து கேட்டனர். கற்ற வர்கள் திருந்தினால் மற்றவர்கள் அவர்களைப் பார்த்துச் செம்மையான முறையில் திருந்தி விடுவார்கள். இது தொடர்ந்து நடந்திருந்தால், சிவநெறியின் செம்பொருளை உணர்ந்தவர்கள் 2000 பேர்களாகியிருப்பார்கள். இது கோயில்தோறும் அறநிலையங்கள் தோறும் தொடர்ந்து பத்தாண்டுகள் நடக்குமாயின், ஆண்டுக்கு 5000 விகிதத் தில் நாட்டில் 50,000 பேர் திருவருள் ஞானம் பெற்ற

தக்கோராய்த் தோன்றி விடுவர். அவர்களுடைய உணர்வும் செயலும் நாட்டின் சமுதாய வாழ்வில் மிகச் சிறந்த நோக்கங்களை உண்டாக்கும்.

நமது சமாசமே ஆண்டு விழாவின் வேருக இடையிடையே பலவிடங்களில் சைவ வகுப்பு எற்படுத்தித் திருவருள் ஞானம் நல்கும் பணியில் முயன்றது. அரசியல் தேர்தல்கள் போல் இந்த மக்கட்பணி கைம்மேல் பயன் தருவதில்லையாதலால் சில ஆண்டுகளில் செல்வரது ஆதரவு குறைந்தது; அதனுல் சமாசம் தனது பணியைத் தொடர்ந்து நடத்த இயலாது போயிற்று. ஆகவே அப் பணிகளைக் கோயில்களும் அறநிலையங்களும் மேற்கொள்ளுதல் கடனுகிறதல்லவா ?

திருவருள் உணர்வு நல்கும் முறையிலும் சிறிது கருத்தைச் செலுத்த வேண்டும்.

அருள் நூல்கள் தோன்றிய காலத்தில் மக்களினத்தின் அறிவும் சூழ்நிலையும் வேறு வகையில் இருந்தன. இப்போது உலகியல் பொருள் அறிவு பெருகியுள்ளது. காரணகாரிய ஆராய்ச்சி ஆண்பெண் இருபாலாரிடத்திலும் ஓரளவு வளர்ந்துள்ளது. வெறும் நம்பிக்கைகள் நிற்க இடமின்றித் தடுமாறுகின்றன. திருக்குறள், சிவஞான போதம், திருமுறைகள் போன்ற நூல்களே இன்று விஞ்ஞான நெறியில் வளரும் அறிவாராய்ச்சியின் எதிர் நிற்கும் ஆற்றல் உடையவையாக இருக்கின்றன. ஆண்டு தோறும் கோயில்களும் அறநிலையங்களும், விழா நாட்களில் பதினறு வயதுக்கு மேற்பட்ட கற்ற இளைஞர்களையும் முதியவர்களையும் கூட்டிச் சிவஞானபோதம் திருக்குறள் ஆகிய நூற் கருத்துகளைக் காலையில் வகுப்பு நிறுவிக் கற்பிப்பதும், மாலை சொற்பொழிவு வாயிலாகத் திருமுறை வரலாறு, திருமுறை ஆசிரியர் வரலாறுகளை எடுத்துரைப்பதும் என ஐந்தாண்டுத் திட்டம் ஒன்று வகுத்துப் பணி புரிவது இக் காலத்துக்கு எற்றது. ஓர் ஆண்டுக்கு நமது மாநிலத்தில் பத்தாயிரம் பேர் விகிதம் சமயவுணர்வுடையராகச் செய்வது தக்கது. ஐந்தாண்டில் 50,000 பேர் ஆவர். அவர்கள் வாயிலாக ஆளுக்கு ஐந்து பேர் வீதம் கொண்டாலும், ஐந்து ஆண்டுகளில் இரண்டரை லட்சம் பேர் சமயவுணர்வு பெற்று மகிழ்வர்.

நம் நாட்டில் கோயில் வழிபாடு பொறுப்பற்ற நிலையிலும், விழாக்கள் பொழுது போக்காகவும் மாறி வருகின்றன. சில இடங்களில் பீடி சுருட்டு முதலிய பொருள்களின் விற்பனை விளம்பரம் தருவதற்கு விழாக்கள் வசதி செய்து தருகின்றன. கோயிலுக்குப் போகிறவர்கள், இறைவனுக்கு நீராட்டுவித்தலும், தேங்காய் உடைத்தலும் சூடம் ஏற்றுவிப்பதும், விளக்கிடுவதும் விழாச் செய்வதுமே சமயப் பணியாகக் கருதி அமைகின்றனர். இவை வழிபாட்டில் நம் சிந்தையை ஈர்த்து நிறுத்துவன. ஆயினும், இவற்றைச் செய்பவருள் பெரும்பாலார் மனம் இவற்றோடு நேரே தொடர்பு படுவதில்லை; இது திருவருளின் இயக்கம் என்பது அவர்களுக்குத் தெரியாது.

ஆண்டவனை வழிபடும்போதும், அவனது திருவருளே நம்மில் இயங்குகிறது. "அவன் அருளாலே அவன்தாள் வணங்கி" என்பது மணிவாசகம். இத்திருவருளைச் சிந்திக்கும் பயிற்சி இல்லாமைதான் வழிபாட்டில் மனம் பொருந்தாமைக்குக் காரணமாகும். ஆண்டவனுக்கும் நமக்கும் உள்ள தொடர்பு; ஆண்டவனுக்கும் நாம் வாழும் உலகுக்கும் உள்ளதொடர்பு; நமக்கும் உலகுக்கும் உள்ளதொடர்பு; ஆகிய மூன்று தொடர்புகளும் ஏன் உண்டாயின? எப்படி உண்டாயின? எனச் சிந்திப்பதே திருவருட்சிந்தனை.

அச்சிந்தனை திருவைந்தெழுத்தை முன்நிறுத்தி நமது மனத்தின் கோழைப் பண்பை மாற்றித் திண்மையும், தூய்மையும் உடையதாக்கும். மனம் திண்ணியராயினோர் திருக்குறள் சொல்வதுபோல "எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்." மனம் தூய்மை, கல்வி, தொழில் வாணிகம் முதலிய வாழ்க்கைக் கூறுகளை வளமாக்கி மக்கட் செல்வமும், மாநிதிச் செல்வமும், மிக்க வாழ்நாள் மேம்படு செல்வமும் நிறைவிக்கும். மனம் தூய்மை கெடாமல் பாதுகாப்பது அரிது. அதற்கு வழி திருமுறைகளைப் பொருளறிந்து ஓதுவது. சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார், பலரும் ஏத்தப் பேரின்பம் பெறுவர். எப்படியெனில் மனம் தீய நினைவுகட்கு இடமாகும்போது தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைப் பாட்டுக்களைப் படித்து அவற்றின் கருத்தறிய முற்படுவோமானல் தூய்மையைச் சிதைக்கும் நினைவுகள், நஎன்ற மறைக்கும்

அருளால் கெட்டுப்போகும்; பாட்டின் பொருளும் அவற்றைச் செய்த திருமுறை ஆசிரியர்களின் ஞானவொளியும் உள்ளத்தில் பாய்ந்து ஒளிசெய்யும். மனமும் தூய்மை கெடாமல், திண்மை சிதையாமல் திகழ்ந்து சிறக்கும்.

வெறும் நம்பிக்கைமேல் நில்லாமல் அறிவாராய்ச்சி மேல் நிற்கும் நம் சைவ சமய வுணர்வு தழைத்துப் பரவுமானால், மக்கள் அனைவரையும், சமநிலையில் நின்று இயக்கும் திருவருளின் சிறப்பு நன்கு உணரப்படும். ஒவ்வொருவரும் உலகோடு தமக்கிருக்கும் தொடர்பையும், தமக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பையும் உணர்வர்; உணர்ந்தால் தம்போல் உலகில் பிறந்த அனைவரும், இறைவன் அருள் பெறும் இயல்பினராவர் என்ற உணர்வு பெற்று, வேற்றுமையுணர்வைப் போக்கி ஒரு குடும்பத்தவராய் ஒத்து வாழ்ந்து இன்பம் எய்துவர். இதனை முடிபாகக் கொண்டே மெய்கண்டதேவ நாயனார்,

> "தம்மை யுணர்ந்து தமையுடைய தன்உணர்வார்
> எம்மை உடைமை எமை இகழார்—தம்மை
> உணரார் உணரார் உடங்கு இயைந்து தம்மில்
> புணராமை கேளாம் புறன்"

என்று சிவஞான போதத்தின் தொடக்கத்திலேயே எடுத்துரைத்தார்.

இதில் தம்மை யுணர்வது என்பது ஒரு பெரிய செயல் அன்று. இந்த உணர்வு, உலகத்தையும், உடம்பையும் படைத்தளித்து வாழச் செய்யும் தலைவனாகிய சிவ பரம்பொருளின் திருவருட் செயலை அறிந்து கொள்ளச்செய்யும். இனி தம்மையுடைய தன் உணர்தல் என்பது இவ்வாறு தன் உணர்வார், தம்மைப்போல் ஏனை நாம் எல்லாரும் சிவத்தின் அருட்கு இலக்கானவர் என்ற கருத்து விளங்கப்பெற்று நமைத் தம் போலவே எண்ணிச் சமநிலையில் கொண்டு தழுவி ஒழுகுவர் என்பதற்காக, 'எம்மை உடைமை எமை இகழார்' என்று சிவஞானபோதம் கூறுகிறது. 'தன்' என்ற சொல் முதல்வனாகிய சிவ பரம்பொருளைக் குறிக்கிறது.

**தம்மை உணரார் உணரார்:** அதாவது முன்னே சொன்ன முறையில் தம்மை உணராதவர் வேற்றுமையற்ற ஒருமைச் சமநிலைச் சமுதாய அமைப்பே வேண்டியது

என்று அறியமாட்டார்கள். அந்த உணர்விலிகள் தம்மில் மனம் கலந்து ஒன்று சேர்ந்து வாழ ஒருப்படவும் மாட்டார்கள் என்பது விளங்க, உடங்கு இலையந்து நம்மில் புணரார் என்றும், பின்பு அவர்கள் என்ன செய்வார்கள் என்றால் பிறரைப் புறங்கூறிச் சமுதாயத்தின் ஒருமையைச் சீரழிப்பர் என்றும் அவர் கூறுவதை யாங்கள் ஒருநாளும் செவியில் ஏற்கமாட்டோம் என்றும் கூறலுற்ற மெய்கண்ட தேவர், கேளாம்புறன் என்றும் விளங்க உரைக்கின்றார்.

இன்றைய அரசியல் தலைவர்கள் பலரும் இத்தகைய ஒருமைச் சமுதாயம் அமையவேண்டும் என்று தமக்குரிய முறையில் அரசியல் மேடைகளிலும், பொது மேடைகளிலும் பறையறைந்து வருகின்றனர். நமது சிவநெறிச் சமயக் கருத்தும் அதற்கு ஒத்து இயங்குவதால், அவர்கட்கு இதனை எடுத்துரைப்பின் அவர்களும் வேண்டும் உதவிகளைச் செய்வர் ; அவரவர் எண்ணும் எண்ணங்களும் ஈடேறும்.

"நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எக்நாளும் துன்பமில்லை." என்று

செம்மாந்து பேசும் செல்வ வாழ்வு பெற்றுச் சிறக்கலாம்.

பெருமக்களே, இதுகாறும், என் உள்ளத்தில் தோன்றிய கருத்துக்களை எடுத்துரைத்தேன் ; நீங்களும் அமைதியுடன் இருந்து கேட்டீர்கள். இவ்விழாவிற்குத் தலைமை தந்து என்னைச் சிறப்பித்த வரவேற்புத் தலைவரையுள்ளிட்ட பெருமக்களுக்கும், சென்னைச் சைவசித்தாந்த மகா சமாஜத்தினர்க்கும், இங்கே கூடியிருக்கும் ஏனை நன்மக்கள் அனைவர்க்கும், என் பணிவன்பு கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் கருவி கரணங்களை இயக்கியும், இச்சமாச ஆண்டு விழா இங்கே நிகழ்தற்கு வேண்டிய எண்ணத்தையும் முயற்சியையும் உண்ணின்று தூண்டியும், உதவிய சிவபரம் பொருளாகிய பழனிப் பால தண்டாயுத முருகப்பெருமான் திருவடிகள் வாழ்க என வாழ்த்தி, என் தலைமையுரையை இவ்வளவில் நிறுத்துகின்றேன். வாழ்க சிவநெறி.

---

சைவ சித்தாந்த மகா சமாஜம்

# 56-ஆம் ஆண்டு நிறைவு விழா, பழனி

# சைவர் மாநாட்டுத் திறப்புப் பேருரை

[திரு., M. S. சாரங்கபாணி முதலியார், B.A, B.L.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை]

(30—12—1961)

" ஞாலநின் புகழேமிக வேண்டும்தென்
ஆலவாயில் உறையும் எம்ஆதியே."

மெய்யன்பர்களே !

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 56-ஆம் ஆண்டு விழாவை யொட்டிய சைவர் மாநாட்டைத் தொடங்கிவைக்கும் பேற்றை எனக்கு அளித்துள்ளீர்கள். அந்த வாய்ப்பை எனக்கு அளித்தவர்கள் பழனிச் சைவசித்தாந்த சபையினரும், சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தினரும் ஆவர். அவ்விரு கழகத்தார்களும் 'வண்ணப்பணித்தென்னைவாவென்ற வான்கருணைக்கு' யான் யாது கைம்மாறு செய்யவல்லேன் ! ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் பலர் இருப்ப, தகுதியில்லாத என்னை இத்தொண்டை மேற்கொள்ளச் செய்தது அவர்கள் என் மாட்டுக்கொண்ட அன்பின் மிகுதியேயாகும். ஆண்டவன் அருளும் அடியார் அன்பும் ஒன்று சேர்ந்தால் அடியேன் அடங்கித்தானே ஆகவேண்டும். உலகெலாம் உணர்ந்து ஓதற்கரிய ஆதியும் அந்தமுமில்லா அரும்பெருஞ்சோதியின் புகழைப் பேசுவதற்காக இங்கு நாமெல்லாம் கூடியிருக்கிறோம். தோற்றமும் ஈறுமில்லாத இறைவனின் தொல்பெருமை பேசப்படும் இப்பேரவையைத் தொடங்கி வைக்கப் பணித்தமைக்கு என் உளங்கலந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த மாநாடு பழனியம்பதியிலே கூடியிருப்பது மிகப் பொருத்தமுடையது. இத்தலத்தின் பெருமையையும், இங்கெழுந்தருளியுள்ள முருகப்பெருமானின் மகிமையையும் அறியாதார் இல்லை. இது பழம் பெருமை வாய்ந்தது; சங்க இலக்கியங்களில் விதந்து பேசப்படுவது; அறுமுகச் செவ்வேளின் ஆறுபடை வீடுகளில் ஒன்றாகத் திகழ்வது;

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற்றுப்படையில் இடங் கொண்டது; தேவர்களும், மூவர்களும் இங்கு வந்து திரு முருகனின் திருவோலக்கத்தைக் கண்டதாகக் கூறப்படும் பெற்றி வாய்ந்தது.

ஆவியர் குடியினராகிய பேகன் முதலிய குறுநில மன்னர் ஆட்சிக்குட்பட்ட இடமாதலின் ஆவிநன்குடி எனப் பெயர்பெற்றது. சங்க நூல்களில் பொதினி என்ற பெயரால் அழைக்கப்படுவது. பல திருநாமங்களையுடைய முருகனுக்கு, சித்தன் என்ற பெயரும் ஒன்று. அதனால் சித்தன் வாழ்வு என்ற பெயரும் இத்தலத்திற்கு அமைந் திருக்கிறது. ஔவையார் "நல்லம்பர் நல்ல குடியுடைத் துச் சித்தன் வாழ்வு இல்லந்தொறும் மூன்று எரி யுடைத்து" என்று பாடியிருப்பதே இதற்குச் சான்றாகும். மயிலுக்குப் போர்வையளித்த வள்ளல் வாழ்ந்த இடம் இது. மயிலை ஊர்தியாக உடைய முருகப்பெருமான் காட்சி அந்த மன்னனின் மனக்கண்முன்னே தோன்றி யிருக்க வேண்டுமென்று கொள்வதில் வியப்புமுண்டோ! செந்தமிழ்ச் சந்தப்பாக்களை அந்தமாகப் பாடிய அருண கிரியார் இங்குள்ள முருகப்பிரான்மீது 130 திருப்புகழ்ப் பாடல்களைப் பாடியிருக்கிறார். இவ்வளவு பாடல்களை அவர் வேறு எந்தப் பதிக்கும் பாடியதாகத் தெரியவில்லை. 'பழைய பழனி,' 'தண்டமிழ்சேர் பழனி', 'வழியடிமை கொண்டுமிக்க மாதவர்வளர் பழனி' என்றெல்லாம் போற் றிப் புகழ்கிறார். இன்னும் சிவமலை, சிவகிரி, சிவவெற்பு, ஞானமலை, பழனாபுரி என்ற பெயர்களையும் குறிக்கிறார். அடிவாரத்திலுள்ள கோயிலைத் திருவாவினன்குடி என்றும், மலைமேலுள்ள கோயிலைப் பழனி என்றும் வழங்குகிறோம். அருணகிரியார் ஒரு பாடலில் பழனித் திருவாவினன்குடி என்றே சேர்த்துப் பேசுகிறார். 'நாதவிந்துகலாதி நமோநம' என்ற பாடலை அறியாதவர்களில்லை. அதில்,

> ஆதரம் பயிலாரூரர் தோழமை
> சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
> ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி
> ஆதி அந்தவு லாவாசு பாடிய
> சேரர் கொங்குவை காவூர்ந னாடதில்
> ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே.

என்று முடிக்கிறார். கொங்குமண்டலத்திலுள்ள வைகாவூர் நாட்டிலுள்ளது ஆவினன்குடி என்பது இதனால் பெறப்படுகின்றது. சித்தன்வாழ்வு என்று போற்றப் பெறும் இப்பதியில் சைவசித்தாந்த மாநாடு கூடியிருப்பது சாலப்பொருத்தமுடையது என்று கூறவும் வேண்டுமோ!

சைவசமயத்தின் வரலாற்றையோ அல்லது சைவசித்தாந்த தத்துவங்களையோ நான் உங்கள் முன்பெடுத்துப் பேசப்போவதில்லை; அப்படிப் பேச எனக்குப் போதிய ஆற்றலுமில்லை. இறைவன் எப்படி அனாதியோ அப்படியே இந்த உலகமும் உயிர்களும். கடவுள் என்ற சொல்லைக்கண்ட தமிழனின் நுண்மாண் நுழைபுலத்தை என்னென்று கூறுவது! கட, உள் என்ற பகுதி விகுதிகளையுடையது. கட என்பது எல்லாவற்றையும் கடந்தது (Transcendental) என்று பொருள்படுவது. அப்படியானால் நமக்கென்னபயன் என்ற கேள்வி யெழும். அவ்வினாவிற்கு விடையாகவே உள் என்ற விகுதியமைந்திருக்கிறது. அவன் எல்லாவற்றுள்ளும் நிறைந்து (Immanent) நிற்கிறான் என்பதைக் குறித்து நிற்கிறது. உயிர் என்ற சொல் உய்வதற்கு வழிதேடுவது என்ற பொருளமைதியுடையது. உயிரைப் போர்த்தி நிற்பது உடல். உடு என்னும் பகுதியினடியாகப் பிறந்தது. உடலை இயக்குவிப்பது உயிர். அவ்வுயிரை இயக்குவிப்பது உயிர்க்குயிராய் நிற்கும் இறைவன். கடவுள் உயிர் உலகம் என்ற மூன்று பொருள்களையும் கண்டவன் தமிழன்-சைவன். சிவபெருமானைப் போன்றே சைவ சமயமும் அனாதியானது. "The most ancient living faith" என்று மேனாட்டவர் புகழ்ந்து பேசப்படும் பெருமையுடையது. சைவ சித்தாந்தத்தின் சீரிய கருத்துக்களைப் பற்றி அரிய சொற்பொழிவாற்றக் கற்றுத்துறைபோய நல்லவர் முதலிய பேரறிஞர்கள் பலர் இங்கே கூடியிருக்கும் காட்சி கழிபேருவகை யளிப்பதாகும்.

சைவசித்தாந்த மகா சமாஜம் 56 ஆண்டுகளாகப் பல நற்செயல்கள் புரிந்து வருகிறது. நாடெங்கிலும் மாநாடுகள் கூட்டுகிறது. கடல்கடந்தும் இலங்கை சென்று மூன்று ஆண்டுகள் யாழ்ப்பாணம், கொழும்பு, திருக்கேதீச்சுரம் இந்த இடங்களில் மாநாடுகளை நடத்தியிருக்

கிறது. இன்னும் சில மாதங்களில் மலாய்நாடு சென்று மாநாடு நடத்தப்போகிறதென்பதை யறிய மட்டற்ற மகிழ்ச்சி உண்டாகிறது. சங்க நூல்கள், திருமுறைகள், சாத்திரங்கள் முதலியவற்றைப் பிழையறப் பதிப்பித்து அடக்க விலைக்கு விற்று நாடெங்கணும் வீடுகள்தோறும் சமய நூல்கள் சேரும்படி செய்திருக்கிறது. "சித்தாந்தம்" என்ற மாத இதழை வெளியிட்டு வருகிறது. "சைவப் புலவர் தேர்வு" ஒன்றையும் நடத்தி வருகிறது. ஈடும் எடுப்புமற்ற சைவ சமயத்தின் தத்துவங்களை எல்லோரும் படித்து இன்புறுவதற்கு ஏற்ற எளிய முறையில் நூல்கள் வெளிவர வேண்டுமென்பது என்னுடைய பேரவா. இலக்கிய இலக்கண அறிவுடையோர்க்கே சித்தாந்த சாத்திரங்களைப் புரிந்துகொள்ள முடியும் என்பது உண்மை. ஆனால் சாதாரண அறிவுடையவர்களும் அவற்றைத் தெரிந்து கொள்வதற்குப் படி முறைகளை வகுக்கவேண்டும் என்பது என்னுடைய ஆசை. அதற்கு ஆவன புரியுமாறு இங்குக் கூடியிருக்கும் அறிஞர்களைக் கேட்டுக்கொள்கிறேன். எங்களுடைய அறநிலையத்துறையில் எங்களால் இயன்ற பணிகளைச் செய்து வருகிறோம். சிர்குலைந்திருந்த எல்லாக் கோயில்களையும் பழுதுபார்த்துத் திருப்பணிசெய்து வருகிறோம். பாடல்பெற்ற பதிகளில் உள்ள கோயில்களில் சிறப்பாக எங்கள் கவனத்தைச் செலுத்தி வருகிறோம். பல கோயில்களில் திருமுறைக் கோயில்களை அமைத்திருக்கிறோம். தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவிடைவாய் என்ற தலத்திலுள்ள கோயிலில் திருஞானசம்பந்தர் பதிகம் கல்லில் பொறித்து வைத்திருப்பதைச் சில ஆண்டுகளுக்கு முன்பு கண்டு பிடித்ததை நாம் அறிவோம். அதே போல் பல கோயில்களில் திருமுறைப் பாடல்களைப் பொறித்து வைத்திருக்கிறோம். பல கோயில்களில் நூல் நிலையங்கள் இருக்கின்றன. தேவாரப் பாடசாலைகள் நடத்திவருகிறோம். அவ்வப்போது வேதாகம சைவசித்தாந்தப் பயிற்சி வகுப்புக்கள் நடத்துகிறோம். ஓதுவார்களுக்கும் தேவாரப் பயிற்சியளித்துப் பரிசுகளும் வழங்குகிறோம். திருவிழாக்காலங்களில் சமயச் சொற்பொழிவுகள் நடைபெற ஏற்பாடு செய்கிறோம். தலவரலாறுகளும், தலத்தைப் பற்றிய நூல்களும் வெளியிட்டு வருகிறோம்.

'திருக்கோயில்' என்ற சிறந்த மாத இதழையும் எங்கள் அலுவலகத்திலிருந்து மூன்று ஆண்டுகட்கு மேலாக வெளியிட்டு வருகிறோம். கோயில் நிர்வாகத்தினர்க்கு ஏற்ற வகையில் "இந்து சமயக் கையேடு" (Guide book on Hindu Religion) என்ற நூலும் வெளியிடுவதற்காக உருப்பெற்று வருகிறது. ஒவ்வொரு மாவட்டத்திலுள்ள கோயில்களைப் பற்றிய வரலாறுகளும் தொகுத்து வெளியிடுவதற்கு அரசாங்க ஆணை பிறந்திருக்கிறது. அத்திட்டத்தின்படி ஒரு மாவட்டத்தின் கோயில்கள் வரலாறு எழுதி முடிந்துவிட்டது. கூடிய விரைவில் வெளிவரும் என்று எதிர் பார்க்கப்படுகிறது. மற்றுமோர் செய்தியை உங்களுக்குத் தெரிவிப்பதற்கு என் மனம் உந்துகிறது. தமிழ் நாட்டிலுள்ள தலைசிறந்த கோயில்களையும் விழாக்களையும் விளக்கும் வகையில் அமைந்த வண்ணப் படம் ஒன்று பெரும்பொருட் செலவில் எடுத்திருக்கிறோம். நம் நாட்டாரும் வெளிநாட்டாரும் கண்டுகளிக்கும் வண்ணம் தமிழிலும் இந்தியிலும் அதற்கு விளக்கங்கள் அமைக்கப் பட்டிருக்கின்றன. விரைவில் ஆங்கிலத்திலும் விளக்கம் அமைக்கப் படும். அந்தப் படத்தையும் கூடிய விரைவில் திரையிடத் திட்டமிட்டிருக்கிறோம். ஏதோ நாங்கள் செய்துகொண்டு வரும் தொண்டுகளை உங்கள் முன்னால் ஆசைபற்றி அறையலுற்றேன். தற்பெருமை கூறிக் கொள்வதாக எடுத்துக் கொள்ளமாட்டீர்கள் என்று நம்புகிறேன். சமய உண்மைகளைப் போதிப்பதற்காகத் தனியே நம்முடைய நாட்டில் கல்லூரி இல்லாத குறையிருந்தது. அதை நிறைவு செய்வதற்காக இப்பதியிலே "பழனியாண்டவர் கீழ்த்திசைப் பண்பாட்டுக் கல்லூரி" என்ற ஒன்றைப் பல்கலைக் கழக இசைவு பெற்று இரண்டாண்டுகளாக நடத்திவருகிறோம். சமயத்திற்குச் செய்யவேண்டிய ஆக்கவேலைகள் எவ்வளவோ இன்னும் இருக்கின்றன. அறிஞர்கள் கூடியிருக்கும் இப்பேரவையில் அவற்றை ஆராய்ந்து தெரிவித்தால், "ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே செல்லும் வாயெல்லாம் செயல்" என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்கப் பணி புரிய முயல்கிறோம்.

இந்த மாநாடு கூடியிருக்கும் கூடம் முன்னாலேயே திறந்து இருக்கிறது. எல்லோரும் இங்கு வந்து அமர்ந்

திருக்கிறோம். இனி யான் எதைத் திறந்துவைப்பது என்று புரியவில்லை. மக்கள் மனத்தைத்தான் திறந்து வைக்க வேண்டு மென்று உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். மனிதன் வையத்தில் வாழ்வாங்கு வாழ்வதற்குச் சமய உணர்வே அடிப்படை. அந்தச் சமயத்தைப் பரப்புவதே நம்முடைய தலை சிறந்த பணி. அந்த சீரிய தொண்டில் ஈடுபட வந்திருக்கும் எல்லோரையும் 'சேரவாரும் செகத்தீரே' என்று அழைக்கின்றேன். இதுவரையில் என் சொற்களைச் செவிமடுத்த உங்களுக்கு என்னுடைய நன்றி உரித்தாகும். "அன்பர் பணி செய்ய எனை ஆளாக்கி விட்ட" இந்த இரண்டு சங்கத்தார்க்கும் மீண்டும் என்னுடைய மனங்கலந்த நன்றியைத் தெரிவித்துக்கொண்டு அமைகிறேன்.

---

# சமாஜ ஆண்டுவிழா

[G. கலியாணம், M. A., சமாஜச் செயலர்]

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 56-ஆவது ஆண்டு நிறைவு விழாவும் அதன் அங்கங்களாகச் சைவர், சைவ மங்கையர், சைவ இளைஞர் மாநாடுகளும் பழனியில் 30-12-61, 31-12-61, 1-1-62 இந்த மூன்று நாட்களிலும் மிகச் சிறப்பாக நடைபெற்றன. திரு. V. V. C. R. முருகேச முதலியார், திரு. க. அரங்கசாமி முதலியார் B.A., இவர்களைத் தலைவராகவும், செயலாளராகவும் கொண்ட பழனிச் சைவ சித்தாந்த சபை, இவற்றை நடத்திக்கொடுத்தது. ஆண்டுவிழா தொடங்குவதற்கு முன்னுளே சென்னை, மலேயா, இன்னும் தமிழ்நாட்டின் பல மாவட்டங்களிலுமிருந்தும் அங்கத்தினர்களும், மற்ற அன்பர்களும் வரலாயினர். பழனி அருட்சோதி வீதியிலுள்ள மூன்று மடங்களில் வந்திருந்தோர் அனைவரும் தங்குவதற்கு இடம் அமைத்திருந்தனர்.

முதல்நாள் 30-12-61 காலை மாநாட்டிற்கு வந்தவர்கள் அனைவரும் அடிவாரத்திலுள்ள திருவாவினன்குடிக் கோயிலில் வழிபாடு நிகழ்த்தினர்கள். அங்கிருந்து மாநாடு நடைபெறுவதற்காக அலங்கரிக்கப் பெற்றிருந்த வடக்கு கிரிவீதி

யிலுள்ள ஸ்ரீ தண்டாயுதபாணி தேவஸ்தான அரங்கிற்குத் தலைவர் முதலியவர்கள் ஊர்வலமாக அழைத்துச் செல்லப் பெற்றனர். நாதசுவரம், தேவார பாராயணம் முழங்க, யானை முதலியவற்றுடன் ஊர்வலம் மாநாட்டு மண்டபத்தை யடைந்தது. காலை 9-மணிக்கு மாநாடு தொடங்கியது. இறைவணக்கத்திற்குப் பின், சைவ சித்தாந்த சரபம், மகா மகோபாத்தியாய சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்கள் மாநாட்டுக்கு எல்லோரையும் வரவேற்று ஆசியுரை வழங்கினார்கள். அரசாங்க அறநிலையத்துறை ஆணையர் திரு. M.S. சாரங்கபாணி முதலியார், B.A., B.L. அவர்கள் மாநாட்டைத் திறந்து வைத்துத் தமது பேருரையை நிகழ்த்தினார்கள். சென்னைத் தருமபுர ஆதீனச் சமயப் பிரசார நிலையத் தலைவர், வித்துவான் - ஒடுக்கம் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வாழ்த்துரை கூறினார்கள். ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள், தருமை ஆதீனம், மதுரைத் திருஞான சம்பந்தர் ஆதீனம் இவற்றின் தலைவர்கள், இலங்கை சர். கந்தையா வைத்தியநாதன், பேராசிரியர் திரு. அ. மு. பரமசிவானந்தம் M.A., M.Litt., நாகர்கோயில் திரு. C. வள்ளிநாயகம் பிள்ளை முதலியோர் அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்திகள் வாசிக்கப் பெற்றன. சமாஜத்தின் 1961-ஆம் ஆண்டு அறிக்கையைச் சமாஜச் செயலர் திரு. G. கலியாணம் M.A. அவர்கள் வாசித்தார்கள். பின்னர் ஆண்டுவிழாவிற்கும் சைவர் மாநாட்டிற்கும் மதுரைத் தியாகராசர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் 'சித்தாந்த கலாநிதி' திரு. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் தலைமை தாங்கித் தமது தலைமைப் பேருரையை நிகழ்த்தினார்கள். இவற்றுடன் முதல்நாள் காலை நிகழ்ச்சிகள் முடிவடைந்தன.

அன்று மாலை 4-மணிக்கு மாநாடு கூடியது. தவத்திரு. ஐயாறு அடிகள், திருமதி அது காமாட்சிஅம்மையார் M.A., திரு. அ.கி. பரந்தாமனார் M.A., இம்மூவர்களும் முறையே "திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சிக் குறிப்புக்கள்," "சித்தர் கண்ட சித்தாந்தம்", "சங்க நூல்களில் சமயம்" என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். மாநாட்டுத் தலைவர் கருத்துரைக்குப் பின், பழனி தேவார வகுப்பு மாணவ மாணவிகளால் "மங்கையர்க்கரசியார்" நாடகம்

நடிக்கப்பெற்றது. திருஞானசம்பந்தராக நடித்த சிறுவனுக்குப் பொற்பதக்கம் அளிக்கப்பெற்றது. இத்துடன் முதல்நாள் நிகழ்ச்சிகள் முடிவுற்றன.

இரண்டாம் நாள் 31-12-61 காலை 8 மணிக்குச் சைவ மங்கையர் மாநாடு கூடியது. திருமதி, க. ர. ஆதிலட்சுமியம்மையார் அவர்கள் தமது தொடக்க வுரையை ஆற்றினார்கள். திருமதி புஷ்பம் நடராஜன் அம்மையார் அவர்கள் தலைமை வகித்துத் தமது தலைமையுரையை நிகழ்த்தினார்கள். திருமதிகள் - வித்துவான் சிவகாமி மணிமுத்து, இராஜேசுவரி சுவாமிநாதன் இவர்கள் முறையே, "சைவம் வளர்ந்தது யாரால்", "வழிபாடு" என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். சைவ மங்கையர் மாநாட்டுத் தலைவியார் தமது கருத்துரை கூறி முடித்தார்கள். மலேயாவிலிருந்து மாநாட்டுக்கு வந்திருந்த திரு. K. இராமநாதன் செட்டியார் B. A., B. L. அவர்கள் இவ்வாண்டு மேமாதத்தில் சமாஜத்தின் சிறப்பு மாநாடு ஒன்றை மலாய் நாட்டில் நடத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். சமாஜச் சார்பில் சமாஜச் செயலர் அவ்வேண்டுகோளுக்கு இசைவதாகக் கூறினார். காலை நிகழ்ச்சிகள் நிறைவேறின.

பிற்பகல் 2-மணிக்கு உறுப்பினர் பொதுக்கூட்டத்தில் தீர்மானங்கள் நிறைவேறின. மாலை 4-மணிக்கு மீண்டும் மாநாடு தொடங்கியது. மதுரை - திரு. கருமுத்து தீ. சுந்தரம் செட்டியார் B. Com. அவர்கள் மறுநாள் நடைபெறவேண்டிய சைவ இளைஞர் மாட்டுத் துவக்க உரையை நிகழ்த்தினார்கள். திருவாளர்கள் - வித்துவான் து. நடேச கவுண்டர் பி. ஓ. எல்., P. R. சுவாமிநாதன் M. A., L. T., இவர்கள் முறையே "தேனூறும் வாசகங்கள்", "மருள் நீக்கியார்" என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். மாநாட்டுத் தலைவர் திரு. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் தமது கருத்துரையைக் கூறினார்கள். ஈரோட்டுச் சிறுமியர் மூவர் நடனத்துடன் இரண்டாம் நாள் நிகழ்ச்சிகள் முடிவடைந்தன. இரவு 9 மணிக்கு சமாஜப் பணியாளர், வெளியூர் ஆலோசனைச் சபையினர் முதலியோர் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

மூன்றாம்நாள் 1-1-1962 காலை 8 மணிக்குச் சைவ இளைஞர் மாநாடு கூடியது. இம்மாநாட்டுத் தலைவர் வாலாஜாபாதது

இந்துமத பாடசாலை மேலாளர் திரு. நா. ப. தனிகை அரசு அவர்கள் தமது தலைமை யுரையை நிகழ்த்தினார்கள். திரு வாளர்கள் - புலவர் ந. ரா. முருகவேள் M. A., M. O. L., வித்துவான் - வி. சிவக்கொழுந்து, வித்துவான் - தீ. கி சுந்தர மூர்த்தி, M. நடராசன் M. A., B. O. L., இவர்கள் முறையே "அருணந்தி சிவம்", "திருவாசகம்", "சேக்கிழாரும் தேவாரமும்", "சைவத்தின் தொன்மையும் சமரசமும்" என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழி வாற்றினார் கள். தலைவர் கருத்துரைக்குப் பின் காலை நிகழ்ச்சிகள் முடிவடைந்தன.

பிற்பகல் 2-மணிக்கு, சமாஜ ஆராய்ச்சிக் குழுக்கூட்டம் கூடியது. மலேயா மாநாட்டில் "சைவ சித்தாந்தம்" "பன்னிரு திருமுறைத் திரட்டு" இவ்விரு நூல்களை வெளி யிடவேண்டு மென்றும், திருவாசகம், இதுவரை வெளி வராத அரிய சித்தாந்த நூல்கள், சித்தாந்தக் கருவி நூல் கள், சைவ பரிபாஷை, சிவஞான பாடியத்துக்குச் சொல் லகராதி, சைவ சமய வரலாறு, சைவ சித்தாந்த நூல் தொகை முதலியவை வெளியிடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டு மென்றும் முடிவு செய்யப்பெற்றது. திருச்சிற்றம்பலம் திரு. மு. அருணாசலம் M. A., அவர்கள் பன்னிரு திருமுறைத் திரட்டிற்கான பாடல்களைத் தொகுத் துத் தருவதாக ஒப்புக் கொண்டார்கள். பின்னர் மாலை 4-மணிக்குச் சைவர் மாநாடு கூடியது. திரு. ச. சச்சிதா னந்தம் பிள்ளை, B. A., L. T., அவர்கள் தலைமை தாங்கினார் கள். வித்துவான் தவத்திரு. இராமசாமி அடிகள், திரு. மு. அருணாசலம் M. A., பேராசிரியர் S. ஆறுமுக முதலியார் M. A., B. O. L., L. T. இம்மூவர்களும் "வீரசைவம்", "சைவ சித்தாந்தம் 14, 15-ஆம் நூற்றாண்டுகள்", "திருக்குறளும் சமயமும்" என்னும் பொருள்கள் பற்றி விரிவுரை ஆற்றி னார்கள். தலைவர் முடிப்புரை கூறினார்கள். பழனி சைவ சித்தாந்த சபையின் சார்பில் திரு. க. அரங்கசாமி முதலியார் B. A., அவர்களும், சமாஜச் சார்பில் திரு. G. கலியாணம் M. A., அவர்களும், மாநாட்டுத் தலைவர்கள் சிறப்பாளர்கள், சொற்பொழிவாளர்கள், கலைநிகழ்ச்சி களில் பங்கு கொண்டோர், மற்றும் மாநாடு மூன்று நாட் களிலும் சிறப்பாக நடைபெறத் துணைபுரிந்தோர் எல்

லோருக்கும் நன்றி கூறினர்கள். கடவுள் வாழ்த்துடன் மாநாடு இனிது நிறைவேறியது. பின்னர் மதுரை வழக்கறிஞர் திரு. P. S. அழகர் ராஜா அவர்களின் பேர்த்தி செல்வி - பிரபாவதியின் நடனம் நடைபெற்றது. மூன்று நாட்களிலும் உள்ளூர், வெளியூர்களிலிருந்து திரளாக மக்கள் கூடியிருந்து கலைநிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள் முதலியவற்றைக் கண்டும் கேட்டும் மகிழ்ந்தனர்.

குறிப்பு :—மாநாட்டுத் திறப்புரை, மாநாட்டுத் தலைமையுரை இவ்விரண்டும் இவ்விதழில் வெளிபிடப் பெறுகின்றன. மற்ற திறப்புரைகள், தலைமையுரைகள், ஆண்டு அறிக்கை, சமாஜச் சொற்பொழிவுகள் முதலியன "சித்தாந்தம்" இதழ்களில் தொடர்ந்து வெளியிடப்பெறும்.

---

## சமாஜச் செய்திகள்

**மலேயாவில் சமாஜ மாநாடு :** பழனியில் நடைபெற்ற சமாஜ ஆண்டு விழாவிற்கு மலேயாவிலிருந்து வந்திருந்த திரு. கே. இராமநாதன் செட்டியார் அவர்கள், மலேயாவில் 1962 மே மாதத்தில் சிறப்பு மாநாடு நடத்துவதற்காகச் சமாஜத்தை அழைத்தார்கள். சமாஜம் அதை ஏற்றுக் கொண்டது. பயணம் குறைந்தது ஒரு மாத காலம் பிடிக்கும். மூன்றாம் வகுப்புக் கப்பல் பயணமும் மற்ற செலவுகளும் ஏறக்குறைய ஐந்நூறு ரூபாயாகும். பயணத்தில் கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள் சமாஜச்செயலருக்கு எழுதி முன்னடியே தங்கள் பெயரைப் பதிவுசெய்து கொள்ளும்படியாகக் கேட்டுக்கொள்ளப்படுகிறது.

**செயற்குழுக் கூட்டம் :** சமாஜச் செயற்குழுக் கூட்டம் 28-1-62 ஞாயிறு காலை 9-30 மணிக்கு மயிலை கீழ மாட வீதி 12 எண்ணுள்ள சமாஜ அலுவலகத்தில் கூடும். புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட செயற்குழு உறுப்பினருக்குத் தனியே அறிக்கை அனுப்பப்படும். அவர்கள் வரும்படியாகக் கேட்டுக்கொள்ளப்படுகிறது.

**வாயிலார் நாயனர் திருநட்சத்திர விழா :** 13-1-62 சனிக்கிழமை மாலை 6-30 மணிக்கு, மயிலை வெள்ளீசுவரர் கோயிலில் நடைபெறும். திரு. அ. சோமசுந்தரம் செட்டியார், எம்.ஏ. அவர்கள் தலைமையில் வித்துவான் - திரு. அம்பை

சங்கரனர் அவர்கள் "வாயிலார் நாயனர்" என்னும் பொருள்பற்றிப் பேசுவார்கள்.

முக்கிய அறிவிப்பு : சமாஜத்திற்கு எழுதப்படும் கடிதங்கள், புத்தக ஆர்டர்கள் முதலியன "ஜி. கலியாணம், எம்.ஏ., சமாஜச் செயலர், 67, லாயிட்ஸ் ரோடு, சென்னை-14" என்ற முகவரிக்கே எழுதும்படியாகக் கேட்டுக் கொள்ளப்படுகிறது.

—ஜி. கலியாணம், செயலர்.

## செய்திச் சுருக்கங்கள்

கொழும்பு விவேகானந்த சபையில் திருமுறை விழா: சிவநெறி கூறும் தொல்பெரும் சிறப்புமிக்க பன்னிரு திருமுறைகளையும், அவற்றினை அருளிய அருள் அடியார்களையும் போற்றிப் புகழுமுகமாகக் கொழும்பு விவேகானந்த சபையின் ஆதரவில் (9, 10, 11-2-62) தேதிகளில் சபை மண்டபத்தில் திருமுறை விழா நடைபெறும். இவ் விழாவில் தவப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார், கலைமகள் ஆசிரியர் கி. வா. ஜகந்நாதன், திருவாவடுதுறை ஆதீனத்து ஓதுவாமூர்த்திகள்போன்ற பெரியோர்களும் ஈழத்துச் சைவப் பேரறிஞர் பலரும் இசைவாணர்களும் கலந்து கொள்வர். வெளியேயிருந்து விழாவுக்கென வருவோர்களுக்கு உணவு, இடவசதிகள் செய்துகொடுக்கவும் ஒழுங்குகள் செய்யப்படுகின்றன.

மாதவழிபாடு:—திருச்சிற்றம்பலம் ஸ்ரீ நடனபுரீஸ்வரர் ஆலயத்தில் கிராமத்தார் சிறப்பு முறையில் மாத வழிபாடு நடத்துவது என்று தீர்மானித்து ஐப்பசி மாதம் முதல் நடந்து வருகின்றது. கார்த்திகை மாதம் கடைசி சோமவார தினத்தன்று விசேஷ ஆராதனையோடு வழிபாடு நடைபெற்றது. காந்தி வித்தியாலயத் தமிழ் ஆசிரியர் ஸ்ரீ கல்யாணசுந்தரம், கார்த்திகை பற்றியும், சோமவாரம பற்றியும் சொற்பொழிவாற்றினர்.

புரசைத் திருநெறிக்கழகம் 11-ஆம் திங்கள் வழிபாடு:— 21-1-62 ஞாயிறன்று தொண்டை நன்னாட்டின் 29, 30-வது திருத்தலங்களாகிய திருஅச்சிறுபாக்கம், திருவக்கரை ஆகிய இருதலங்களிலும் நடைபெறும். வழிபாட்டன்பர்கள், அன்றுகாலை 6-15 மணிக்குச் சென்னைப் புரசை, வைக்கோற்காரன் தெருவிலுள்ள வேம்படி விநாயகர் கோயிலிலிருந்து பேருந்தூர்தி மூலம் செல்ல ஏற்பாடாகியுளது.

கி. இராமலிங்கனார், எம்.ஏ., அ. கு. காமாட்சி அம்மையார், எம்.ஏ., ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி., டாக்டர் - வி. ஏ. தேவசேனாபதி, எம்.ஏ., பிஎச்.டி, வித்துவான் - முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், வித்துவான் - க. வெள்ளைவாரணனார்.

ஆராய்ச்சிக்கழகம் : வித்துவான் - சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், வித்துவான் - ஆ. சிவலிங்கனார், சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ., பி.எல்., பி. திருஞானசம்பந்தம், எம்.ஏ., மு. அருணாசலம், எம்.ஏ., அ. மு. பரமசிவானந்தம், எம்.ஏ., எம்.லிட்., ஔவை - சு. துரைசாமி பிள்ளை, க. வெள்ளைவாரணனார், வி. ஏ. தேவசேனாபதி, எம்.ஏ., பிஎச்.டி., தி. கி. நாராயணசாமி நாயுடு, நல். முருகேச முதலியார், பி.ஏ., க. வச்சிரவேலு முதலியார், பி.ஏ., எல்.டி.

வெளியூர் ஆலோசனைச் சபையினர் :

தஞ்சாவூர் :—மு. அருணாசலம், எம்.ஏ., ரா. ம. சம்பந்தமூர்த்தி முதலியார், கே. கனகசபைப் பிள்ளை.

கன்னியாகுமரி :—சி. வள்ளிநாயகம் பிள்ளை, பி.ஏ., பி.எல்., ஆறுமுக நாவலர்.

திருநெல்வேலி :—வி. எஸ். ஆறுமுகம் பிள்ளை, வித்துவான் - மறை - திருநாவுக்கரசு, எஸ். எஸ். அருணாசலம் பிள்ளை, தெ. கணபதியப்பன், சிவயோகீசுவர அடிமை.

மதுரை :—கே. அரங்கசாமி முதலியார், பி.ஏ., வி. வி. சி. ஆர். முருகேச முதலியார், வித்துவான் ஔவை-சு. துரைசாமிப் பிள்ளை, கருமுத்து தி. சுந்தரம் செட்டியார், பி. காம்.

கோயம்புத்தூர் :—கே. பி. ஆர். சுப்பராயன், எஸ். மீனாட்சி சுந்தர முதலியார், பி.ஏ.,எல்.டி., சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார், பி.ஏ., பி.எல்., இராமசாமி அடிகள், C. R. சதாசிவ முதலியார்.

தென்னூர்க்காடு :—பொன்னம்பலம் பிள்ளை, தி. கி. நாராயணசாமி நாயுடு, கே. எம். பெரியதம்பி, பொன். கோவிந்தசாமிப் பிள்ளை, கே. ஆறுமுக நயினார், ரா. சண்முகசுந்தரம் செட்டியார்.

பெங்களூர்:—ஏ. ஆர். அண்ணாமலை முதலியார், எஸ். கனகசபாபதிப் பிள்ளை.

கொழும்பு :—சர். கந்தையா வைத்தியநாதன், குலசபாநாதன், அருள் தியாகராஜா, சபாபதிப் பிள்ளை.

திருக்கோணமலை :—பண்டித ஆர். வடிவேலு, என். அம்பலவாணன்.

மட்டக்களப்பு :—க. அருணாசல தேசிகர், பூபால பிள்ளை.

திருச்சிராப்பள்ளி :—அரிமளம் - அண்ணாமலைச் செட்டியார், ஜி. வரதராஜப் பிள்ளை, பி.ஏ., பி. என். ஆர். செல்லப்ப செட்டியார்,

இராமநாதபுரம் :—சேவு. மெய்யப்ப செட்டியார், சொ. நாராயணன் செட்டியார், சி. டி. எம். என் நாராயணன் செட்டியார், ஆர். எம். எஸ். திருநாவுக்கரசு செட்டியார், காசிநாததுரை.

வடஆர்க்காடு :—புரிசை - முருகேச முதலியார், ஆறுமுகம், எம்.ஏ., பி டி., வி. எஸ். கணபதி முதலியார், பாலசுப்பிரமணிய முதலியார்.

சேலம் :—வள்ளி செட்டியார், பி.ஏ., பி.எல்., அ. கு. காமாட்சி அம்மையார், எம்.ஏ., ஆர்.எம். மாணிக்கம் பிள்ளை, கே. சிங்காரவேல் செட்டியார், அப்பாய் செட்டியார்.

செங்கல்பட்டு :—வா. கு. நடராஜ முதலியார், சி. காளப்ப முதலியார், வித்துவான் திருஞானசம்பந்த முதலியார், கே. இராஜு முதலியார், வித்துவான் அருணைவடிவேல் முதலியார்.

புதுவை :—சேனாபதி முதலியார்.

காரைக்கால் :—தி. சோ. தட்சிணாமூர்த்தி முதலியார், கே. எஸ். எஸ். நடேச முதலியார்.

யாழ்ப்பாணம் :—வட்டுக்கோட்டை நாகலிங்கம், எஸ் நடேச பிள்ளை, பி.ஏ., பி.எல்., ஏ. அருளம்பலம், முத்துத்தம்பி, எஸ். அம்பிகைபாகன், பி.ஏ., ஞானப்பிரகாசம்.

மலாய்நாடு :—கே. இராமநாதன் செட்டியார், பி.ஏ., பி.எல்., சிவநேயன், அ. மு. பெரியசாமிப் பிள்ளை, பழனிவேல் பிள்ளை, ஆர். வி. கந்தையா, எம். இராமசாமி முதலியார்.

---

ஸ்ரீமெய்கண்ட குருதேவர் குருபூசை விழா : நாகர்கோயில் நன்னெறிமன்றச் சார்பில் ஸ்ரீமெய்கண்ட தேவர் குருபூசை விழா சுசீந்திரம் திருவாவடுதுறை ஆதீனம் திரு மடத்தில் ஸ்ரீலஸ்ரீ திருஞானசம்பந்தசுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. அர்ச்சனை, திருமறை ஓதுதல், பஜனை, தியானம், மௌனம் ஆகியநிகழ்ச்சிகள் வழக்கம்போல் நடைபெற்றன. சைவப் புலவர்களாகிய திருவாளர்கள் P. A. நடேசபிள்ளையும், ஈ. பகவதிபெருமாள் பிள்ளையும் 'ஸ்ரீமெய்கண்டசிவம்', 'சிவஞானபோதச் செம்பொருள்' என்னும் தலைப்புகளில் முறையே சொற்பொழிவாற்றினார்கள். ஆதீனம் பேஷ்கார் திரு. D. ஆறுமுகம் பிள்ளை வாழ்த்துக் கூற, தீப ஆராதனையோடு கூட்டம் இனிது நடைபெற்றது.

---

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14. Warren Road, Mylapore, Madras-4.